6th August 1965]

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார்.** அது அரசாங்கத்தி னுடைய பொறுப்பு. உத்தரவு போடவேண்டிய அவசியம் இருக் காது. அங்கங்கு உள்ள மத்திய பாங்கைச் சேர்ந்தவர்கள் அதைச் செய்வார்கள். அத்தியாவசியம் ஏற்படுகிறதென்ருல் பாங்கின் டைரக்டர்கள் இருக்கிருர்கள். அதைத் தள்ளிக் கொடுப்பார்கள்.

*Agricultural Co-operative Banks*

* 67 Q.—Sri N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) the reason for enhancing the share amount from 10 per cent to 15 per cent for raising a loan in the Agricultural Co-operative Banks; and

(*b*) the reason for collecting a thrift deposit too?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** (அ) இந்தச் சங்கங் களின் சொந்த நிதியை அதிகப்படுத்தி, இவை வெளியே கடன் பெறுவதைக் குறைப்பதற்காக, அவற்றின் ஒவ்வொரு அங்கத் தினரும் செலுத்தும் பங்குமூலதனம் அவர் வாங்குகிற கடனில் 10 சத விதமாக இருக்க வேண்டுமென்பதைப் படிப்படியாக 20 சத வீதத்துக்கு உயர்த்தும்படி அவைகட்கு யோசனை கூறப்பட் டிருக்கிறது.

(இ) கூட்டுறவுக் கடன் சங்கம் ஒன்றின் முக்கிய நோக்கம் அங்கத்தினர்களுக்குத் தேவையான உற்பத்திக் கடன் வழங்குவ தோடு அவர்களிடையே சிக்கனப் பழக்கத்தை வளர்ப்பதேயாகும். நாளடைவில் குடியானவர்கள் கடன் வாங்கும் பழக்கம் சிறிது சிறிதாகக் குறைய வேண்டும். இவர்களிடையே சிக்கனப் பழக்கத்தை ஏற்படுத்துவதற்காகவே, வேளாண்மைக் கடன் சங்கங்களில் சிக்கன டிபாசிட் நிதிக்கெனக் கட்டாயமாகத் தொகை செலுத்தும் முறை கொண்டுவரப்பட்டிருக்கிறது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** விவசாயிகளுடைய நிதி நிலைமை இப்போது திருப்தியாக இல்லாதிருப்பதால் இந்த மாதிரி யோசனைகளை சிறிதுகாலம் ஒத்திப் போட அரசாங்கம் முன் வருமா?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** இது எல்லாமே ரிசர்வ் பாங்கு கண்டிஷனைப் பொருத்தது. அங்கெல்லாம் இந்த மாதிரி செய்யவேண்டுமென்று அவர்களுடைய விதிமுறைகளின்படி செய்யவேண்டிய நிலைமை இருக்கிறது. ஒவ்வொரு பாங்கும் நிதிக் காக சர்க்காரை அதிகமாக எதிர்பார்ப்பதைவிட அங்கங்கு டெபாசிட் செய்ய வழி ஏற்படவேண்டுமென்றுதான் இது செய்யப் பட்டது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** ரிசர்வ் பாங்கு சாதாரணமாக எந்த பாங்காக இருந்தாலும் தொந்தரவு கொடுக்கிருர்கள் என்பது உண்மைதான். விவசாயிகள் என்ற காரணத்தால் விவசாய பாங்குகளுக்கு இந்த சலுகை பெற அரசாங்கம் யோசிக்குமா? இது பற்றி ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

[6th August 1965

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** இப்போதெல்லாம் அதிகமாக விரிவாகக் கொடுக்கவேண்டுமென்று இல்லை. இவை யெல்லாம் தேவையென்றுதான் அரசாங்கம் கருதுகிறது.

SRI M. SUBBIAH CHETTIAR: Are these Agricultural Banks, Co-operative Credit Societies and the Central banks under the control of the respective directors of those institutions, or are they run with the support of the State Government or are they entirely under the Control of the Reserve Bank which chalks out their policies? Who is responsible for formulating the policies of these banks?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** ரிசர்வ் பாங்கு, ஸ்டேட் பாங்கு முதலிய பாங்குகள் வரிசையாக இருக்கின்றன. கனம் உறுப்பினர்களுக்குத் தெரியாதது அல்ல. கனம் உறுப்பினர் என்ன கேட்கிருர்கள் என்று புரியவில்லை.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** விவசாய பாங்குகளில் கடன் கேட்டால் வேறு சில நாணய சங்கங்களில் பங்குத்தொகை எடுக்க வேண்டுமென்றும் சென்ட்ரல் பாங்கில் வற்புறுத்துகிருர்கள். இது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அரசாங்கத்தின் யோசனையின் பேரில்தான் அது கேட்கப்படுகிறதா? இல்லையென்ருல் அதற்குத் தக்க நடவடிக்கை அமைச்சர் அவர்கள் எடுப்பார்களா? விவசாய பாங்கில் கடன் கேட்டால் வேறு ஒரு நாணய சங்கத்திலும் பங்குத் தொகை எடுத்தால்தான் கடன் கொடுக்கப்படுமென்று சென்ட்ரல் பாங்கில் சொல்கிருர்கள்.

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** அப்படி ஒன்றும் அரசாங்கத்திற்குத் தகவல் இல்லை.

3–20 p.m. **திரு. எஸ். கே. சம்பந்தன் :** தென்ஞற்காடு மத்திய பாங்கு அப்படிச் சொல்கிறது. குறிஞ்சிப்பாடி விவசாய பாங்கில் கடன் கேட்டபோது அங்குள்ள இராமலிங்கசாமி கூட்டுறவு பாங்கில் பங்குத்தொகை எடுத்தால்தான் கடன் கொடுக்க முடியுமென்று சொல்லப்பட்டது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** கனம் மெம்பர் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்கிருர்கள். அதை அவர்கள் எழுதி யனுப்பினுல் ஆவன செய்ய முயற்சிக்கலாம்.

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** தற்போது நாட்டில் நிலவும் உணவு நெருக்கடியை முன்னிட்டு உற்பத்தி செய்யும் விவசாயி களுக்கு கடன் கொடுக்கிற போது பங்குத் தொகை 15 சத விதம் வேண்டுமென்ற சூழ்நிலையை உணவு நெருக்கடி திரும்வரையிலாவது தளர்த்த சிபாரிசு செய்ய முடியுமா?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** இதையெல்லாம் பார்த்து அதில் உள்ள நன்மையைக் கருதித்தான் வைத்திருக் கிறோம்.

6th August 1965]

SRI M. SUBBIAH CHETTIAR: Sir, is there any plan to open more agricultural co-operative banks in the rural sector, and what is the policy of the Government in this regard?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார்:** விவசாய அபிவிருத்தி புதிதாக தற்போது இல்லை. இருக்கிற கிரெடிட் சொசைடியை அவர்களுக்காக வைக்க வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் கருத்து.

*Bridge across the Paravanar river*

* 68 *Q*.—SRI S. K. SAMBANDHAN: Will the Hon. the Minister for Local Administration be pleased to state, with reference to the answer given to Legislative Council Question No. 66 on 18th February 1961, the stage at which the construction of a bridge across the Paravanar river now stands?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத்:** நான்காவது திட்ட காலத்தில் இந்த வேலைக்கு அங்கீகாரம் அளிக்கப்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

**திரு. எஸ். கே. சம்பந்தன்:** கனம் அமைச்சர் அவர்கள் 1961 பிப்ரவரியில் சொல்லிய பதிலை எடுத்துச் சொல்ல ஆசைப்படு கிறேன் " The works have been prepared by the Divisional Engineer and they are under scrutiny and final check." என்று சொல்லியிருக்கிறார்கள். இது 1961-ல் இப்போது அமைச்சர் அவர்கள் பதில் சொல்வது 1965-ல். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ளும் என்று சொல்கிறார்கள். அந்தத் திட்டத்திலாவது எடுத்துக்கொள்வார்களா, என்ற உறுதி அளிக்க முடியுமா? அல்லது அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திற்கு எடுத்துச் செல்லப்படுமா?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத்:** அங்கத்தினர் அவர்களுக்கு சந்தேகம் வேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். முதல் பாகத்தில் உத்தேசமாக எட்டு லட்சம் ரூபாயில் அது நடக்கு மென்று நினைக்கிறேன்.

**திரு. எஸ். கே. சம்பந்தன்:** கிராமப்பகுதிகளைச் சேர்க்கும் ஒன்றாக இருப்பதால் அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க அரசாங்கம் உத்தேசிக்குமா?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத்:** அதற்குத்தான் பதில் அளித்தேன்.

*Elections of the Presidents of the Panchayats and Chairmen of the Panchayat Union Councils*

* 69 *Q*.—SRI S. K. SAMBANDHAN: Will the Hon. the Minister for Local Administration be pleased to state the number